ஓ! பாரதரே! அவ்விடத்தில், ஆயிரம்யானைகளும் பதினாயிரம்குதிரைகளும், அப்படியே, ஆயிரம் தேர்களும் பதினாயிரம் காலாட்களும் இருந்தனர்.

ஓ! ராஜஸ்ரேஷ்டரே! பெரிதான தமது படையுடன் சேகிதானனும் சேதிநாட்டவர்களுக்கு நாயகனான திருஷ்டகேதுவென்கிற அரசனும் சென்றார்கள். பெரிய வில்லையுடையவனும் விருஷ்ணிகளில் மிகச் சிறந்த தேராளியும் பலசாலியுமான ஸாத்யகியும் நூறாயிரம் தேர்களால் சூழப்பட்டவனாகிச் சேனையை நடத்திக்கொண்டு சென்றான். புருஷஸ்ரேஷ்டர்களான (கிருஷ்ணார்ஜுனர்கள்) [1]க்ஷத்திரதேவனைபோலவும் பிரம்மதேவனைபோலவும் பின்பக்கத்தைக் காக்கிறவர்களாகிப் பின்தொடர்ந்து சென்றார்கள். அந்தப் பின்பாகத்தில் வண்டிகளும் கடைகளும் வேசிகளின் கூட்டமும் யுத்தத்திற்குத் தகுதியான வாகனமும் ஸாதாரணமான வாகனமும் ஆயிரம் யானைகளும் பதினாயிரம் குதிரைகளும் எங்கும் தொடர்ந்தன. யுதிஷ்டிரர், பாலர் முதலியவர்களையும் பெண்பிள்ளைகளையும் இளைத்தவர்களையும் பலமற்றவர்களையும் பொக்கசத்தையும் தானிய முதலியவற்றையும் யானைப்படையோடு சேர்த்துக்கொண்டு மெதுவாகச் சென்றார். தவறாத தைர்யத்தையுடையவனும் சண்டையில் கெட்ட மதத்தையுடையவனுமான ஸௌசித்தியும் ஸ்ரேணிமானும் காசிராஜனுடைய புத்திரனான வஸுதானனும், அவரைப் பின்தொடர்ந்தார்கள். இருபதினாயிரம் தேர்களும், அவைகளுக்குப் பின்செல்லுகிறவர்களும், பெரியவைகளும் சலங்கைகள் பூண்டவைகளுமான பத்துக்கோடி குதிரைகளும், கலப்பைக்கால்கள்போன்ற கொம்புகளுள்ளவைகளும் போர் புரியக்கூடியவைகளும் நல்ல குலத்திலுண்டானவைகளும் கன்னத்தில் மதப்பெருக்குள்ளவைகளும் மேகங்கள்போலச் செல்லுகின்றவைகளுமான இருபதினாயிரம் யானைகளும் பின்தொடர்ந்தன. பொழிகின்ற மேகங்கள்போல மதம் பெருக்கும் கன்னத்தையும் முகத்தையுமுடையவைகளும் யுத்தத்தில் யுதிஷ்டிரருக்குச் சேனையாயிருந்தவைகளுமான வேறு எழுபதினாயிரம் யானைகள், சலிக்கின்றமலைகள் போல, அரசரைப் பின்தொடர்ந்தன.

எந்தச்சேனையையடுத்துத் திருதராஷ்டிர புத்திரனான துர்யோதனனோடு யுத்தம் செய்தாரோ, குந்தி புத்திரரான யுதிஷ்டிரருடைய பயங்கரமான அந்தச் சேனையானது இவ்விதம் இருந்தது. மற்றும்

1 'க்ஷத்ரஹரன்' என்பதும், 'க்ஷத்ரதேவன்' என்பதும் ஆங்கில மொழி பெயர்ப்பின் பாடம்.

நூற்றுக்கணக்காகவும் ஆயிரகணக்காகவும் பதினாயிரக்கணக்காகவுமுள்ள வேறு வீரர்களும் ஆயிரக்கணக்கான அவர்களுடைய சேனைகளும் கர்ஜித்துக்கொண்டு பின்தொடர்ந்தனர். அச்சேனையில் மிக்க ஸந்தோஷத்தை அடைந்தவர்களாகி ஆயிரக்கணக்காகவும் பதினாயிரக் கணக்காகவுமுள்ள மனிதர்கள், மிக்ககளிப்புடன், ஆயிரக்கணக்கான பேரிகைகளையும் பதினாயிரக்கணக்கான சங்கங்களையும் முழக்கினார்கள்.

அம்போபாக்யானபர்வம் முற்றிற்று.

## உத்யோகபர்வம் முற்றிற்று.



